இதழ் 15 மலர் 216 NAVAMANI (Tamil Daily) MADRAS 4 பக்கம் 25 காசு

Reg'd M No. 7897 Phone No. 76190: 76169



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 20—4—75 ஞாயிறு வெளியூர் 21—4—75 திங்கள்



## பாண்டிச்சேரியில்

# இந்திராவிடம் தி.மு.க.- அ.தி.மு.க. மகஜர்

## நேரில் சந்தித்துக் கொடுத்தனர்

புதுவை, ஏப். 20—பிரதமர் இந்திரா காந்தியிடம் தி. மு. க.; அ. தி. மு. க. ஆகிய இரு கட்சியின் சார்பிலும் மகஜர் கொடுக்கப் பட்டது.



மற்றும் இந்திய கம்யூனிஸ்டு கட்சி, புது காங்கிரஸ கட்சி, இளைஞர் காங்கிரஸ் ஆகிய கட்சிகளின் சார்பிலும் மகஜர் கொடுக்கப்பட்டது.

புதுவை வந்துள்ள பிரதமர் இந்திராவை நேரில் சந்தித்து ஒவ்வொரு கட்சியின் தலைவர்களும் தங்களின் புகாரைக் கொடுத்தனர்.

### விரைவில் தேர்தல்

தி. மு. கழகத்தின் சார்பில் பருக் மரக்காயர், அ. தி. மு. க. சார்பில் ராமசாமி, கம்யூனிஸ்டு கட்சி சார்பில் புதுவை சுப்பையா, புதுகாங்கிரஸ் கட்சி சார்பில்வெங்கடசுப்ப ரெட்டியார், இளைஞர் காங்கிரஸ் கட்சியின் சார்பில் கருணாநிதி ஆகியோர் இந்திராவிடம் மகஜரைக் கொடுத்தனர்.

அந்தமகஜர்களில், புதுவையில் விரைவில்தேர்தல்நடத்த வேண்டும் என்று கோரப் பட்டுள்ளது.

### கட்டாய சேமிப்பு ரத்து ஆகுமா?

இன்றுபுதுவை வந்திருந்த பிரதமர் இந்திராவைத் தொழிற் சங்கத் தலைவர்கள் சந்தித்து ஒரு மகஜரைக் கொடுத்தனர். அதில், கட்டாய சேமிப்புத் திட்டத்தை ரத்துசெய்யவேண்டும் என்று கோரப்பட்டிருந்தது.

பிரதமர் இந்திரா புதுவையில் இன்று பல நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார்.

இந்தியா முதன் முதலில் பறக்கவிட்டசெயற்கைகோள் படம் பொறிக்கப்பட்ட தபால் தலையை பிரதமர் இந்திரா இன்று புதுவையில் வெளியிட்டார்.

அதன்பின் காலை 8 மணிக்கு அங்கிருந்து ஹெலிகாப்டர் விமானம் மூலம் சென்னை புறப்பட்டார். விமான நிலையத்தில் அவரை வழியனுப்ப கவர்னர் சேத்திலால், புதுவை சண்முகம், வெங்கடசுப்பா ரெட்டியார், போலீஸ் ஐ ஜி. மற்றும் உயர்தர அதிகாரிகள், அரசியல் பிரமுகர்கள ஆகியோர் வந்திருந்தனர்.

## கபாலி குளத்தில் 2-ம் நாள் தூர் எடுப்பு

சென்னை, ஏப். 20—சென்னை மயிலாபூர் கபாலி குளத்தில் இரண்டாம் நாளாக இன்றும் தூர்எடுப்பு வேலை நீடித்தது. இப்பணியில் மாவட்ட சேரணிப்படையினர் ஈடுபட்டனர்.

மாவட்ட சேரணிப்படையின் தொண்டர்களும். மகளிர் சேரணியினரும் இப்பணியில் முழு அளவில் பங்கு கொள்ள வேண்டுமென சேரணிப் படைத் தலைவர் பி. கே. முத்துராமலிங்கம் ஓர் அறிக்கையில் கேட்டுக்கொண்டுள்ளார்.

(5ம் பத்தி தொடர்ச்சி)

தமக்கு ஏற்படவில்லை என்றார் அவர்.

ஹோல் கோம்ப் நன்கு பண்பட்டவள். ஆகையால் அவளது நடவடிக்கை பற்றி அவளது பெற்றோரும் கவலைப் படவில்லை என்று பள்ளிக்கூட தலைவி தெரிவித்தார்.

## நிர்வாண போட்டியில் வெற்றி பெற்ற ஆசிரியை

புளோரிடா, ஏப். 20—கனடா நாட்டில் நடைபெற்ற நிர்வாணப் போட்டியில் பள்ளிக்கூட ஆசிரியை ஒருவர் கலந்துகொண்டு 2-வது பரிசைப் பெற்றிருக்கிறார்.

இவரது பெயர் காரல் ஹோல் கோமப் என்பதாகும வயது 39.

முன்னர் அமெரிக்காவில் நடைபெற்ற நிர்வாணப் போட்டியில் இவர் முதல் பரிசு பெற்றார்.

6 ஆண்டுகளாக ஆசிரியையாகப் பணிபுரிந்து வரும் இவர், தாம் எதற்கும் துணிந்தே இந்தப்போட்டியில் கலந்துகொண்டதாககூறினார்

சமுதாய ரீதியிலும் பள்ளிக்கூட நிர்வாகிகளிடமிருந்தும் எதிர்ப்பு வரும் என்று எதிர் பார்த்ததாக அவர் கூறினார். ஆனல் எந்தவித சிரமமும்

(1ம் பத்தி பார்க்க)

### சென்னையில்

## இந்திரா நடத்திய முக்கிய ஆலோசனை

சென்னை, ஏப். 20—பிரதமர் இந்திரா காந்தி கேரளத்துக்குச் செல்லும் வழியில் இன்று காலை சென்னை வந்தார்.

விமான நிலையத்தில் அவரை கவர்னர் ஷா, தலைமைச் செயலாளர் கே. சபாநாயகம், புதுகாங்கிரஸ் தலைவர் கே. எஸ். ராமசாமி ஆகியோர் வரவேற்றனர்.

ஒரிசா முதலமைச்சர் நந்தினிசத்பதியும் விமான நிலையத்தில் இந்திராவை வரவேற்றார்.

சென்னையிலிருந்து கொச்சிக்குப் புறப்படும் முன் கே. எஸ். ராமசாமியுடனும், நந்தினி சத்பதியுடனும் முக்கிய ஆலோசனை நடத்தினார்.

சென்னையிலிருந்து விமானப்படை விமானம் மூலம் இந்திரா கொச்சிக்கு வந்து சேர்ந்தார். கேரள கவர்னர் உட்பட பலர் அவரை வரவேற்றனர். 15 நிமிடம் கழித்து அவர் வைக்கம் சென்றார்.

### இந்திராவுக்கு எதிராக

# கறுப்புக் கொடி: பெண்கள் உள்பட 88 பேர் கைது

புதுவை, ஏப். 20—புதுவையில் பிரதமர் இந்திராவுக்கு எதிராகக் கறுப்புக் கொடி காட்டியதாக 88 பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் 19 பேர் பெண்கள்.

கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம் நடத்திக் கைதானவர்கள் மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர்கள்.

புதுவையில் உடனே தேர்தல் நடத்தவேண்டும் என்று கோரியும், மற்றும் பல கோரிக்கைகளை வற்புறுத்தியும், அவர்கள் கறுப்புக்கொடி காட்டினார்கள்.

### ப. காங்கிரஸ் ஆர்ப்பாட்டம் ரத்து

புதுவையில் பிரதமர் இந்திராவுக்கு கறுப்புக் கொடி காட்டப் போவதாக பழைய காங்கிரஸ் கட்சி சார்பில் திட்டமிடப் பட்டிருந்தது அல்லவா

ப. காங்கிரஸ் தலைவர் காமராஜர் கேட்டுக்கொண்டதற்கு இணங்க அந்தக் கிளர்ச்சியை, ப. காங்கிரசார் கைவிட்டு விட்டனர்.

## இந்திராவின் பாதுகாப்பு விமானத்தில் கோளாறு

பாண்டிச்சேசேரி, ஏப்.20 பிரதமர் இநதிரா இன்று காலை பாண்டிச்சேரியிலிருந்து ஹெலிகாப்டர் விமானம் மூலம் புறப்பட்டுச் சென்றபோது அந்த விமானத்துடன் பாதுகாப்பாக இரு ஹெலிகாப்டர் விமானங்களும் கிளம்பின. அவற்றில் ஒன்று தரையிலிருந்து கிளம்பியதும் அதில் கோளாறு ஏற்பட்டது. எனவே உடனே அது கீழே இறங்கியது.

அது கைவிடப்பட்டு அதிலிருந்த விமானிகள் மற்றொரு ஹெலிகாப்டரில் ஏறிச்சென்றனர்.

## நோட்டு இரட்டிப்பு மோசடி: மூவருக்கு போலீஸ் வலைவீச்சு

பட்டுக்கோட்டை, ஏப். 20—ரூபாய் நோட்டை இரட்டிப்பாக்கித் தருவதாகக் கூறி மோசடி செய்ததாகக் கூறப்படும் 3 பேரை போலீசார் வலை வீசி தேடி வருகிறார்கள்.

இது குறித்த விபரமாவது:

பட்டுக்கோட்டை பெரிய கடைத் தெருவில் பாத்திரக் கடை வைத்திருப்பவர் அரசகுமாரன்.

அரசகுமாரனின் நண்பர் இப்ராகிம் சைக்கிள் கம்பெனி வைத்திருக்கிறார்.

ஒரு நாள் செட்டிக்காடு சாமிநாதன், மறவக்காடு நாராயணசாமி ஆகிய இருவரை அழைத்து வந்து அரசகுமாரனுககு அறிமுகப் படுத்தினார் இப்ராகிம்.

இவர்கள் ரூபாய் நோட்டை இரட்டிப்பாக்கித் தருபவர்கள் என்றும். அரசகுமாரனிடம் பணம் இருந்தால் அதை இரட்டிப்பாக்கித் தருவார்கள் என்றும் இப்ராகிம் கூறினார்.

இந்தப்பேச்சை அரசகுமாரன் நம்பி பாங்கியிலிருந்து ரூ. 14 ஆயிரத்து 600 எடுத்துவந்தார்.

பணப்பெட்டியுடன் திருச்சிக்கு சென்றார் அரசகுமாரன் திருச்சி பைபாஸ் ரோடில் அரச குமாரனிடம் உள்ள பெட்டியைப் பெற்றுக் கொண்டு மற்றொரு பெட்டியை அந்த மூவரும் அளித்தனர்.

அவர்கள் கொடுத்த பெட்டியில் இரண்டு மடங்கு பணமிருப்பதாக நம்பி அரச குமாரன் பட்டுக்கோட்டைக்கு சென்றார். அங்கு சென்றுபெட்டியைத் திறந்து பார்த்தபோது பெட்டி காலியாக இருந்தது தெரியவந்தது.

உடனே போலீசில் புகார் செய்தார். பட்டுக்கோட்டை சப் இன்ஸ்பெக்டர் துரைராஜ் வழக்கு பதிவுசெய்து, இப்ராகிம உட்பட 3 பேரையும் தேடி வருகிறார்.

## வாடகைக்கு தாய் தேவை

சான்பிரான்சிஸ்கோ, ஏப். 20—குழந்தை வேண்டும் என்று ஆசைப்படும் அமெரிக்க ஆசிரியர் ஒருவர் வாடகைக்கு தாய் தேவை என்று அமெரிக்கப் பத்திரிகை ஒன்றில் விளம்பரம் செய்துள்ளார்.

அவருடைய விளம்பரத்தை பார்த்து பல பெண்கள் ஆர்வத்துடன் முன்வந்துள்ளனர்.

அந்த ஆசிரியர் திருமணமானவர். ஆனல் மலட்டுத் தன்மை காரணமாக அவருடைய மனைவிக்குக் குழந்தை பிறக்கவில்லை. எப்படியாவது குழந்தை பெற அவர் விரும்புகிறார்.

உடல் உறவு கொள்ளாமலேயே தனது வீரியத்தைப் பெற்றுசெயறகை கருத்தரிப்பு மூலம் ஒரு குழந்தையைப் பெற்றுத் தன்னிடம் அளிப்பதற்கு யாரேனும் பெண் தயாராக இருந்தால் அப்பெண்ணுக்கு 1000 டாலர் கொடுக்கத் தயார் என்று அவர் விளம்பரம் செய்துள்ளார்.

பத்திரிகையில் இந்த விளம்பரத்தைப் பார்த்து பல பெண்கள் அப்பத்திரிகை ஆபீசுக்கு போன் செய்து தாங்கள் தயார்என்று தெரிவித்துள்ளனர்.

ஒரு பெண் பணம் எதுவும் இல்லாமலேயே அவ்விதம் குழந்தை பெற்றுத் தயாராக இருப்பதாகத் தெரிவித்திருக்கிறாள்.

## வானவெளிக்கு பத்திரிகை நிருபர்கள்

வாஷிங்டன், ஏப், 20—அநேகமாக 1982 அல்லது 1983ம் ஆண்டில் வானவெளி நடவடிக்கைகளை நேரில் பார்த்துவானவெளியிலிருந்து செய்திகளை அனுப்ப பத்திரிகை நிருபர்களும் வான வெளிக்குச் செல்வர்.

வானவெளித்துறை நிருபரான ஹோவார்ட் பெனிடிக் இவ்வாறு கருத்து தெரிவித்துள்ளார்.

பத்திரிகையாளர் கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

### "பைத்தியக்காரக் கிளர்ச்சி நடத்துகிறது"

# திராவிடர் கழகம் மீது பக்தவத்சலம் தாக்கு

சென்னை, ஏப். 20—திராவிடர் கழகம் நடத்தும் ராமலீலா கிளர்ச்சி, பைத்தியக்காரத்தனமானது என்று முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் கடுமையாகத் தாக்கினார்.

இன்று தியாகராயர் நகரில் நடந்த ராமலீலா மாநாட்டைத் துவக்கிவைத்து பக்தவத்சலம் பேசியபோது இவ்வாறு குறிப்பிட்டார்.

பக்தவத்சலம் பேசியதாவது:—

இன்று ஸ்ரீராமன் அவதரித்த நாள். இன்று இந்த விழா நடத்துவது பொருத்தமானது.

ராவணன் சீதையை கள்ளத் தனமாகக் கொண்டு போனான், அப்படித் தவறு செய்தவனை சிலர் தன்னுடைய பங்காளி — கூடப் பிறந்தவர் என்று நினைக்கிறார்கள். இது பைத்தியக்காரத்தனம்.

ராவணன் பிராமணர். வேதம் படித்தவன் என்று வால்மீகி சொல்லி இருக்கிறார். தவறில் இருந்து திருந்தாததால் ராவணவதம் ஏற்பட்டது.

நேற்றுவரை நான் தேசபக்தனாக இருந்த பிறகு இன்று தேச துரோகியாக ஆனல் மக்கள் சும்மா இருப்பார்களா? அது போலத்தான் இதுவும்.

ராவணன் தமிழனாக இருந்தாலும் தப்பு செய்யலாமா? அது தமிழனுக்கு பொருத்தம் அல்ல,

இதற்காக கிளர்ச்சி செய்தது பைத்தியகாரக் கிளர்ச்சி வெறுக்கத்தக்க கிளர்ச்சி.

இதனல் நமக்கு புது ஆவேசம் வந்திருக்கிறது.

மூடபக்தி எங்கும் இருக்கிறது. நார்வேயில் ஒரு சாலையில் காரில் போகிறவர்கள் வழியில் இறங்கி ஒரு கிணற்றுத் தண்ணீரில் முகத்தைப் பார்த்துவிட்டுச் செல்கிறார்கள். அதில் பார்த்தால் முகம் அழகாக ஆகும் என்று நினைக்கிறார்கள்.

மூடப்பழக்க வழக்கங்கள் போகவேண்டும் என்று நான் முதல்வராக இருந்த வேளையில் கலைப்பள்ளிகள் ஆரம்பிக்கச் சொன்னேன்.

பகுத்தறிவாதிகளின் தலைசிறந்தவர்கள் என்று சொல்கிகள், ரஷ்யர்களுக்குக்கூட இல்லைஎன்று சொல்கிறார்கள்.

அப்படிப்பட்ட ரஷியர்கள் ராமாயணத்தை ரஷ்யமொழியில் மொழி பெயர்த்து வருகிறார்கள். அதை நாடகமாக நடிக்கிறார்கள்.

அவர்களுக்கு அந்த அருமை தெரிகிறது. நமக்குத்தெரியவில்லை என்றார் பக்தவத்சலம்.

தியாகராய நகரில் நடந்த ராமலீலா மாநாட்டுக்கு வி. ரங்கசாமி தேவர் தலைமைத் தாங்கினார். வழக்கறிஞர் சாந்தலிங்கம் வரவேற்புரை நிகழ்த்தினார். மணலி ராமகிருஷ்ண முதலியார் மாநாட்டுக்கொடியை ஏற்றிவைத்துப் பேசினார்.

மாநாட்டை முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் துவக்கி வைத்தார்.

மாநாட்டில் பார்வர்டு பிளாக் எம். எஸ். ஏ. கந்தசாமி, நா. பார்த்தசாரதி, தஞ்சை ராமச்சந்திரன் ஆகியோர் பேசினார்கள்.

## மறைமலை அடிகள் எழுதிய புத்தகத்துக்கு எதிர்ப்பு

சென்னை, ஏப். 20—சென்னையில் இன்று நடைபெற்றராமலீலா மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:—

"மறைமலை அடிகள் எழுதிய அம்பிகாபதி—அமராவதி என்ற நூல், ராமபிரானையும் இந்துக்களின் ஒரு பகுதியினரையும்தாக்கி கேவலப்படுத்துவதாக உள்ளது. இதைச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஒரு பாடப்புத்தகமாக வைத்துள்ளதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

ஆண்டுதோறும் ராமலீலா கொண்டாடுவது.

இவ்வாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

ராமலீலா மாநாட்டை ஒட்டி இன்று காலை ஊர்வலம் ஒன்று நடந்தது.

மயிலை கபாலி கோயிலில் இருந்து இந்த ஊர்வலம்புறப்பட்டது. அலங்கரிக்கப்பட்ட யானை மீது ராமர் படம் எடுத்துவரப்பட்டது.

மயிலாட்டம், பொய்க்கால் குதிரை, கரக ஆட்டம் முதலியவைகள் ஊர்வலத்தில் இருந்தது.

ராமர், சீதை லட்சுமணர், அனுமார் உருவச் சிலைகள் ஒரு டிரக்கில் எடுத்துவரப் பட்டன.

# ரூ. 25 லட்சம் லஞ்சம்: மந்திரி மீது கோர்ட்டில் வழக்கு

சிங்கப்பூர் ஏப் 20—ரூ 25 லட்சம் லஞ்சம் வாங்கியதாக சிங்கப்பூர் மந்திரி ஒருவர் மீது கோர்ட்டில் வழககு தொடரப்பட்டிருககிறது.

இந்த மந்திரி சிங்கப்பூர் ஆளும் சோசியான மக்கள் செயல்கட்சியைச் சேர்ந்தவர். நீண்ட நாட்களாக மந்திரியாக இருந்து வருபவர். கட்சியை நிறுவியவர்களில் இவரும் ஒருவர்.

இவர் ரூ. 65 லட்சம் மதிப்புடைய ஒரு பங்களா உட்பட மொத்தம் ரூ. 20 லட்சம் முறைகேடாகப் பெற்றார் என்று புகார் கூறப்பட்டிருக்கிறது.

தமது தந்தைக்கு பாங்கிலிருந்து கடன் கிடைக்க பதவியைப் பயன்படுத்தினார் என்றும், ஒரு வீடு கட்டும் நிறுவனத்துக்கு சலுகை காட்டுமாறு அதிகாரிகளிடம் கூறினார் என்றும் இவர் மீது குற்றம சாட்டப்பட்டிருக்கிறது.

கோர்ட்டில் ஒரு மந்திரிமீது வழக்குத் தொடருவது சிங்கப்பூரில் இதுவே முதல்தடவையாகும்.

லஞ்சக் குற்றம் நிரூபிக்கப் பட்டால் சிறைத்தண்டனையோ, உயர்ந்தபட்சம் 10 ஆயிரம் டாலர் அபராதமோ அல்லது இரண்டும் சேர்ந்தோ விதிக்கப்படலாம் என்று சட்டம கூறுகிறது.

கவர்னர் உதவி

# வறட்சிப்பணி புரியும் பெண்களுக்கு புடவை

தூத்துக்குடி, ஏப். 20—வறட்சிப் பணிபுரியும் பெண்களுக்கு புடவைவழங்கப்படும் என்று கவர்னர் கே. கே. ஷா கூறினார்.

தூத்துக்குடியில் வறட்சிப் பகுதிகளைப் பார்வையிட்ட கவர்னர் கே.கே.ஷா மீனாட்சிபுரம் கிராமத்திற்கு வந்தார். அங்கு நடைபெறும் வறட்சிப் பணிகளைப்பார்வையிட்டார். வறட்சிப்பணிகளில் ஈடுபட்டிருந்த ஒரு பெண், கவர்னரைக் கண்டதும் வணக்கம் தெரிவித்தார். பின் கவர்னரை நெருங்கி தனக்கு ஒரு சேலை வழங்குமாறு கேட்டுக்கொண்டார்.

உடனே கவர்னர் ஷா, 20 ரூபாயை அந்தப் பெண்ணிடம் கொடுத்து ஒரு புடவை வாங்கிக்கொள்ளுமாறு சொன்னார். அங்கு வறட்சிப் பணிகளில் குட்டை ஒன்றில் தூர்வாரும் பணியில் ஈடுபட்டிருந்த அத்தனைப் பெண்களுக்கும் தலா ஒரு புடவை வழங்கப்படும் என்ற அறிவிப்பையும் வெளியிட்டார்.

பஞ்சாயத்து தலைவர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு கவர்னர் ஷா பேசினார். அப்போது, குளம் ஒன்றை தூறுவாரும் பணிக்கான திட்டம்நீண்டகாலமாக காலதாமதப்பட்டு வருகிறது' என்று கவர்னரிடம் புகார் கூறப்பட்டது. இது சம்பந்தமாக அதிகாரிகளை ஷா கூடனேவிசாரித்தார். அதற்கு அந்த அதிகாரிகள், "குளத்தில் தூறு வாரும் பணிக்கான திட்டம் அரசு அனுமதி பெற இருக்கிறது' என்றனர். அதைக் கேட்ட ஷா, "அரசு அனுமதி பெற இருக்கிறது என்று சொல்லுவது வீணாக கால தாமதப்படுத்தும் ஒரு முயற்சியாகும் என்று பதில் கூறினார்.

குளத்தில் தூறுவாரும் பணி இன்னும் இரண்டு மாத காலத்துக்குள்மேற்கொள்ளாவிட்டால், உடனடியாக தனக்கு மகஜர் அனுப்பும்படி அவர் பொது மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

# தேர்தல் நடத்தினாலும் தவறு; ஒத்திவைத்தாலும் தவறு என்பதா? இந்திரா கேள்வி

**புதுவை, ஏப். 20—தேர்தலை விரைவில் நடத்தினாலும் தவறு என்கிறார்கள்; தேர்தலை ஒத்திவைத்தாலும் தவறு என்பதா என்று பிரதமர் இந்திரா கேட்டார்.**

**தேர்தல் சீர்திருத்தம் வேண்டுமென்று கேட்பவர்கள் இதுவரை உருப்படியான யோசனை எதையும் கூறவில்லை என்றும் இந்திரா கூறினார்.**

புதுவையில் பொதுக்கூட்டம்ஒன்றில் பிரதமர்இந்திரா பேசினார். அப்போது அவர் பேசியதாவது:—

தேர்தல் சீர்திருத்தம் பற்றி யார் யோசனை தெரிவித்தாலும் அதைப் பரிசீலிக்க அரசு தயாராக இருக்கிறது. ஆனால் இதுவரை உருப்படியான யோசனையை யாரும் இதுவரை தெரிவிக்கவில்லை.

உலகத்தில் பலவகையான தேர்தல் முறைகள் இருந்து வருகின்றன. நமக்கு அரசியல் சட்டத்தை வகுத்து தந்தவர்கள் தீர ஆலோசித்த பிறகுதான் இப்போதுள்ள தேர்தல் முறையை தேர்ந்தெடுத்தார்கள்.

எல்லா விதமான தேர்தல் முறைகளிலும் ஏதாவது ஒரு முறையிலான குறைகள் இருக்கின்றன.

ஆனால், எழுத்தறிவில்லாத மக்களைக் கொண்ட நம் நாட்டுக்கு இப்போதைய தேர்தல் முறைதான் சிறந்தது.

## ஏழைகள் பாதிக்க விட மாட்டோம்

ஆயினும் எந்த விதமான தேர்தல் சீர்திருத்த யோசனைகளையும் பரிசீலிக்க நாம் தயாரிக்க இருக்கிறோம்.

ஆனால், ஏழைகள், தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள் பெண்களைப் பாதிக்கும் வகையில் உள்ள எந்த யோசனையையும் ஏற்றுக் கொள்ள மாட்டோம்.

சிக்கலான ஒரு தேர்தல் முறையை நாம் மேற்கொண்டால், நிச்சயமாக அவர்கள் பாதிக்கப்படுவர்.

## நடத்தினாலும்தப்பு; ஒத்திவைத்தாலும் தப்பு என்பதா?

தேர்தலை நாம் நடத்தினால் யார் யார் அவசரமாக தேர்தலை நடத்துகிறார்கள் என்று தறை கூறுகிறார்கள்; சில இயற்கைக் காரணங்களுக்காக தேர்தலை ஒத்தி வைத்தால் அதையும் குறை கூறுகிறார்கள்.

உலகத்தில் பிரிட்டிஷ் பாராளுமன்ற முறையை மேற்கொண்டிருக்கும் எல்லா நாடுகளிலும் உள்ள ஆளும் கட்சிகளும் தங்களுக்கு சாதகமான சந்தர்ப்பத்தையே தேர்தல்களை நடத்துகின்றன. ஆனால், நாம் அப்படிச் செய்வதில்லை.

ஆனால் தவிர்க்க முடியாத காரணங்களால், அவைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லிய பிறகு நாம் தேர்தலை ஒத்திவைத்தால் ஜனநாயக விரோதிகள் என்று எங்களைக் கூறுகிறார்கள் என்றார் இந்திரா.

## மாணவர்களை தூண்டக்கூடாது

கல்வியைப் பொறுத்த வரையில் பல சீர்திருத்தங்களை நாம் செய்திருக்கிறோம். இனியும் பல சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும். ஏராளமான மாணவர்களைக் கொண்ட நமது நாட்டில் திடீர் திடீர் என்று எந்த மாற்றங்களைச் செய்தாலும், அது மாணவர்களை மட்டுமல்லாமல் ஆசிரியர்களையும் பாதிக்கும். இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் எந்த மாற்றத்தையும் செய்யவேண்டும்.

ஆனால், மாணவர்களை வன்முறைக்கு தூண்டுவதோ, தெருக்களில் வந்து கோஷமிடச் செய்வதோ பிரச்சினைக்குபரிகாரமாகாது.

நாட்டில் என்ன நடைபெறுகிறது என்பது மாணவர்களுக்கு தெரியக்கூடாது என்று நான் சொல்லவில்லை.

முன்னேறிக் கொண்டுவரும் நமது நாட்டின் பிரச்னைகள் சந்திக்கநமதுஇளைஞர்களை தயார் செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகும்.

இவ்வாறு இந்திரா பேசினார்.

கூட்டத்துக்கு புதுவை காங்கிரஸ் தலைவர் வெங்கடசுப்பா ரெட்டியார் தலைமை வகித்தார். பிரதமரின் ஆங்கில பேச்சை அனந்தநாயகி தமிழில் மொழி பெயர்த்தார்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

ஸி. கோபால் நாயகர் வன்னியர் சங்கம் ஆரம்பப் பாடசாலை: பெற்றோர் தின, ஆண்டு விழா; தலைமை; என் பலராமன். கலந்து கொள்பவர் எம். காளத்திநாதன், சி. எல், வேணுகோபால் நாயகர். இடம்; ரசிக ரஞ்சனி சபா, மயிலாப்பூர்—மாலை 6 மணி.

வித்யா பாரதி உயர்நிலை முதன்மை பள்ளி; வருடாந்திர கலாச்சார விழா மற்றும் மாணவர்கள் கைவினைப் பொருள் கண்காட்சி திறப்பு விழா. தலைமை ஆர். சீனிவாசன் கலந்து கொள்பவர்; கர்நாடா கவர்னர் மோகன்லால் சுகாதியா, இடம்; 162 ராயபேட்டை ஹைரோடு, மயிலாப்பூர். மாலை 5-30 மணி.

தமிழ் மன்றங்கள் ஒன்றியப் பேரவை; பாவேந்தர் பிறந்த நாள் பெருவிழா, பாவரங்கம் கருத்தரங்கம் நடைபெறும். பரவரங்கள்—பாவேந்தரின் பைந்தமிழ்ப் படைப்புகள், தலைவர்; பாவலர் நாஞ்சல் ஷா கலந்துகொள்பவர்; செந்தமிழ்ச் செழியன். இராதாகிருட்டிணன் மா. சண்முகம் மற்றும் பலர். இடம்; வேதாந்த சங்கம், சிந்தாதிரிப்பேட்டை மாலை 5 மணி.

குஜராத் தேர்தல்: புது காங்கிரஸ் தீவிரம்

# எல்லா தொகுதிகளிலும் போட்டி: கம்யூனிஸ்டு கட்சியுடன் கூட்டு இல்லை

**ஆமதாபாத், ஏப். 20—குஜராத்தில் ஜூன் மாதம் நடைபெற இருக்கும் பொதுத் தேர்தலில் புது காங்கிரஸ் கட்சி எல்லா தொகுதிகளிலும் போட்டியிடும். கம்யூனிஸ்ட்டு கட்சியுடன் கூட்டு சேராது.**

இத்தகவலை குஜராத் மாநில புதுகாங்கிரஸ் தலைவர் சொலாங்கி தெரிவித்தார்.

குஜராத்தில் மொத்தம் 182 தொகுதிகள் உள்ளன.

மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரதம் காரணமாக மத்திய அரசு ஜூன் மாத ஆரம்பத்தில் குஜராத் சட்டசபைக்கு பொதுத் தேர்தலை நடத்தப் போவதாக அறிவித்துள்ளது தெரிந்ததே. இப்போது குஜராத்தில் ஜனாதிபதி ஆட்சி உள்ளது.

## தீவிரம்

குஜராத் தேர்தலுக்கு நாள் நெருங்கிவிட்டதால் புது காங்கிரஸ் கட்சி இப்போதே தீவிரமாக செயல்பட ஆரம்பித்துள்ளது.

தேர்தலுக்கான வேட்பாளர்களை தேர்ந்தெடுப்பதற்காக புது காங்கிரஸ் கமிட்டி 13 பேர் அடங்கிய தேர்தல் கமிட்டி ஒன்றை அமைத்துள்ளது. இத் தேர்தல் கமிட்டியின் கூட்டம் திங்களன்று நடைபெறும் என்று சோலாங்கி தெரிவித்தார்.

## எல்லா தொகுதிகளிலும் போட்டி

புது காங்கிரஸ் கட்சி 182 தொகுதிகளிலும் போட்டியிடும் என்றும் சோலாங்கி கூறினார். கம்யூனிஸ்டு கட்சியுடன் புது காங்கிரஸ் தேர்தல் உடன்பாடு செய்து கொள்ளுமா என்று கேட்டதற்கு இல்லை என்று அவர் பதிலளித்தார்.

திங்களன்று புது காங்கிரஸ் தேர்தல் கமிட்டி கூட்டம் நடைபெறும்போது அதில் கட்சி மேலிடப் பார்வையாளராக மத்திய மந்திரி வி. சி. சுக்லா கலந்து கொள்வார்.

இத் தேர்தல் கமிட்டியில் எல்லாத் தரப்பினருக்கும் இடமளிக்கப் பட்டுள்ளதாக சோலாங்கி கூறினார்.

ஆனால் அதானி—டார்ஜி கோஷ்டியினர் அதிருப்தி அடைந்துள்ளதாகக் கூறப்படுகிறது.

# வீராணம் திட்டத்தில் ஊழலா?

சென்னை ஏப். 20—வீராணம் திட்டத்தில் 3½ கோடி ரூபாய் ஊழல் என்று மக்கள் குரல் பத்திரிகையில் வெளியிட்ட செய்திகுறித்து நேற்று சட்டசபையில் ஆற்காடு வீராசாமியும், தோப்பூர் திருவேங்கடமும் ஒரு உரிமைப் பிரச்னையைக் கொண்டு வந்தனர்.

ஊழல் என்று பொது நிறுவனகுழு அறிக்கையில் எங்கும் இல்லை. வேண்டும் என்றே அப்படி செய்தி வெளியிட்டு இருக்கிறது. இதை உரிமைக் குழுவுக்கு அனுப்பவேண்டும் என்று இவர்கள் இருவரும் கூறினர்கள்.

இதுபற்றி நடந்த விவாதத்தில் டாக்டர் ஹாண்டேயும் தங்கமணியும் சீனிவாசனும், ஏ. சுப்பிரமணியமும் உரிமை மீறல் இல்லை என்று வாதிட்டனர்.

ஆளும் கட்சி உறுப்பினர் வி. கிருஷ்ணமூர்த்தி அதன் ஆசிரியரிடம் எழுதி விளக்கம் கேட்கலாம்.

இது எல்லாம் உரிமைப் பிரச்னை என்றால் எல்லா பத்திரிகைகளும் உரிமைக்குழுவிற்கு போகவேண்டி வரும் என்றார்.

கந்தப்பன் (திமுக): இதை உரிமைக் குழுவிற்கு விட வேண்டும் என்றார்.

சபாநாயகர் புலவர் கோவிந்தன் தீர்ப்பளிக்கையில் மக்கள் குரல் பத்திரிகை வெளியிட்ட செய்தி ஆதாரமற்றதும், சபையின் உரிமையை மீறியதும் ஆகும் என்றார். ஆயினும் பத்திரிகையின் செயலைக் கண்டிப்பதுடன் இனிமேல் இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபட்டால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று கூறி, உரிமைக் கமிட்டிக்கு அனுப்பாமல் இத்துடன் விட்டுவடலாம் என்று தெரிவித்தார்.

மகாராஷ்டிராவில்

# போலீஸ் நிலையத்தில் பால் விற்பனை: ஸ்டிரைக் எதிரொலி

பம்பாய், ஏப். 20—மகாராஷ்டிரா மாநிலத்தில் 4 லட்சம் அரசு ஊழியர்கள் காலவரையற்றவேலைநிறுத்தம் மேற்கொண்டுள்ளனர். அரசு பால் பண்ணை ஊழியர்களும் வேலை நிறுத்தம்செய்து வருவதால் போலீஸ் நிலையங்களில் பால் விற்பனை நடத்தப்பட்டது.

மத்திய அரசு ஊழியருக்கு அளிக்கப்படுவது போன்று கிராக்கிப்படி அளிக்கவேண்டும் என்று கோரி மகாராஷ்டிராவில் அரசு ஊழியர்வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இந்த வேலை நிறுத்தத்தில் அனைவரும் பங்குகொள்கின்றனர் என்றும் வேலை நிறுத்தம் அமைதியாக நடைபெறுகிறது என்றும் அரசு ஊழியர்கள் பெடரேஷனின் தலைவர் கூறினார்.

வேலை நிறுத்தம் காரணமாக அரசு அலுவலகங்கள், ஆஸ்பத்திரிகள், அரசு பால் பண்ணைகள் ஆகியவற்றில் வேலை முற்றிலுமாக பாதிக்கப்பட்டுள்ளது.

வேலை நிறுத்தத்தை எதிர்பார்த்து பம்பாயில் 5 அரசு ஆஸ்பத்திரிகளில் நோயாளிகள் வீட்டுக்கு அனுப்பப்பட்டனர்.

மூன்றுவது நான்காவது வகுப்பு ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டதால் ஹைகோர்ட்டிலும் மற்ற கோர்ட்டுகளிலும்வேலை பாதிக்கப் பட்டது.

அரசு பால்பண்ணைகளிலிருந்து பால் பெறுபவர்கள்தான் கடுமையாகப் பாதிக்கப்பட்டனர். எனவே நிலைமையைச் சமாளிக்க போலீஸ் நிலையங்களில் பால் விற்கப்பட்டது.

எனினும் இங்கும், மற்றும் பல இடங்களிலும் ஒரு கார்டுக்கு அரை லிட்டர் பால் தான் வழங்கப்பட்டது.

# பழனிவேல் ராஜன் சென்னை திரும்புகிறார்

சென்னை, ஏப். 20—தமிழ் நாடு கூட்டுறவு வீட்டு வசதி சங்கத்தின் தலைவரான பழனிவேல் ராஜன் லண்டனில் நடந்த காமன்வெல்த் பார்லிமெண்டரி மாநாட்டில் கலந்துகொண்டுவிட்டு நாளை காலை 11-45 மணிக்கு விமான மூலம் சென்னை திரும்புகிறார்.

# தங்கக் கோப்பை பரிசுபெற்ற இந்திய ஹாக்கி குழு தோல்வி

சென்னை, ஏப். 20—உலகத் தங்கக் கோப்பையைப்பெற்ற இந்திய ஹாக்கிக் குழு இன்று முதல் தோல்வியை அனுபவித்தது.

உலக இந்திய ஹாக்கி குழுவினருக்கும ஏனைய இந்திய ஹாக்கிக் குழுவினருக்கும் இடையில் நேற்று எழும்பூர் ஹாக்கி அரங்கில் ஆட்டம் நடைபெற்றது.

ஏனைய இந்தியக் குழுவினர் 2 கோல் போட்டனர். தங்கக் கோப்பை பரிசு பெற்றவர்கள் ஒரு கோல்தான் போட முடிந்தது. அவர்கள் அடைந்த முதல் தோல்வி இதுதான். இதுவரை இரு குழுவினரும் 13 தடவை சந்தித்துள்ளனர்.

# தனியார் பஸ்கள் மீது வரி அளவை எதிர்த்து 'ரிட்' மனு

சென்னை, ஏப், 20—பஸ்களுக்கு தமிழ்நாடு அரசு விதிக்கும் வரி மிக அதிகமாக இருப்பதாக ஆட்சேபித்து பஸ் உரிமையாளர் ஒருவர் தாக்கல் செய்துள்ள ரிட் மனுவை சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி ஜி. ராமானுஜம் விசாரணைக்கு அனுமதித்திருக்கிறார்.

1974-ம வருடத்திய தமிழ் நாடு மோட்டார் வாகனங்கள் வரி விதிப்புச் சட்டம, 1974-ம வருடத்திய தமிழ் நாடு மோட்டார் வாகனங்கள் வரி விதிப்பு திருத்தச் சட்டம ஆகியவை செல்லத்தக்கவை அல்ல. என்பது அந்த பஸ் உரிமையாளரின் வாதம.

ஈரோடு, தாராபுரம ஆகிய இடங்களில் அவருக்கு பஸகள் உள்ளன. பஸ்கள் மீதான வரி காலாண்டுக்கு ஒரு சீட்டுக்கு ரூ. 96.50 என்பதில் இருந்து ரூ 180 ஆக இந்தச் சட்டங்களின் கீழ் உயாத்தப்பட்டது என்றும, இதன் விளைவாக 1974-75ல் ஒரே அளவு செயல்முறைக்கு தமது வரிப்பளு ரூ 114652லிருந்து ரூ. 215760 ஆக அதிகரித்தது என்றும அவர் தமது மனுவில் கூறியிருக்கிறார்.

மோட்டார் வாகனங்கள் மீதான வரி விதிப்புக்கு கொள்கைகளை வகுக்காமல் அவற்றின் மீது சகட்டு மேனிக்கு வரிவிதிக்க அரசுக்கு அதிகாரம கிடையாது. வரி விதிப்புக்கு கொள்கைகள் இல்லாத நிலையில் இத்தகைய வரி விதிப்பு அரசியல் சட்டத்திற்குவிரோதமானது ஆகும" என்று மனுதாரர் தமது மனுவில் கூறியிருக்கிறார்.

# ரூ $4\frac{1}{2}$ லட்சம் சந்தனக்கட்டை கடத்தல்: மந்திரி தகவல்

சென்னை, ஏப். 20—1973-74-ம் ஆண்டில் கள்ளக்கடத்தல் செய்யப்பட்ட 9 டன் சந்தனக் கட்டை கைப்பற்றப்பட்டதாக வணிக வரித் துறை அமைச்சர் ஓ. பி. ராமன் தெரிவித்தார்.

இதன் மதிப்பு ரூ 4.50 லட்சம் என்றும், இது சம்பந்தமாக பல வழக்குகள் போடப்பட்டிருப்பதாகவும் அமைச்சர் கூறினார்.

தஞ்சை கோவிலுக்குள்

# ராஜ ராஜ சோழன் சிலை வைக்கப்படும்: கருணாநிதி நம்பிக்கை

சென்னை, ஏப் 20—தஞ்சை பெரியக் கோவிலுக்குள், அந்தக் கோவிலைக் கட்டிய ராஜராஜ சோழன் சிலையை வைக்க மத்திய சர்க்கார் அனுமதி வழங்கும் என்று முதலமைச்சர் கருணாநிதி நம்பிக்கை தெரிவித்தார்.

ராஜராஜ சோழன் சிலையை தஞ்சைப் பெரிய கோவில் உள்ளே வைப்பது குறித்து மேல் சபையில், சுதந்திரா கட்சி உறுப்பினர் ஜி. சாமிநாதன் நேற்று கேட்டார்.

இதற்குப் பதில் அளித்து முதல்வர் கருணாநிதி கூறியதாவது:—

இது குறித்து மாநில அரசின் நிலையை பல முறை எடுத்துக் கூறியிருக்கிறோம். சமீபத்தில் சென்னைக்கு வந்த மத்திய உள்துறை அமைச்சர் பிரம்மானந்த ரெட்டியுடன் இதுபற்றிப் பேசினேன்.

ஆலயத்தின் உள்ளே புதிதாக கட்டப்பட்டு இருக்கும் "வராகி" ஆலயத்தின் படத்தை அவரிடம் காட்டினேன்.

இது குறித்து மத்திய அரசு அதிகாரிகள் தந்த அறிக்கை தவறு என்பதையும் இந்த விஷயத்தில்புதிதாக "வராகி" ஆலயம் கட்டப்பட்டு இருக்கிறது என்பதையும் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

## நம்பிக்கை

ராஜ ராஜ சோழன் சிலையை ஆலயத்தின் உள்ளே வைத்தால், தொன்மை கெட்டுவிடும் என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் இப்படிப் புதிய 'வராகி' ஆலயத்தைக் கட்டியிருப்பதால் தொன்மை கெடாதா என்ற நமது கேள்வியில் உள்ள நியாயத்தையும் இப்போது அவர்கள் உணர்ந்து, ராஜராஜசோழன்சிலையைஆலயத்தின் உள்ளே வைப்பது பற்றி ஆராயப்படும் என்றும் கூறியிருக்கிறார்கள்.

விரைவில் ஆராய்ந்து சிலையை வைக்க அனுமதிப்பார்கள் என்று நம்புகிறேன்.

மேற்கண்டவாறு கருணாநிதி கூறினார்.

# கருணாநிதி எழுதிய புத்தக வெளியீட்டு விழாவில் புரட்சி

சென்னை, ஏப். 20—முதல் அமைச்சர் கருணாநிதி எழுதிய புத்தக வெளியீட்டு விழா புரட்சிகரமான முறையில் நடக்கிறது.

"நெஞ்சுக்கு நீதி" என்ற புத்தகம், முதல் அமைச்சர் கருணாநிதி எழுதியது. அது அவருடைய வாழ்க்கை வரலாறு ஆகும்.

இந்தப் புத்தக வெளியீட்டு விழா வருகிற 30ம் தேதி சென்னை கலைவாணர் அரங்கில் நடக்கிறது. விழாவுக்கு, கண் பார்வை இழந்தவரான ஆசிர் நல்லதம்பி தலைமை தாங்குகிறார்.

தொழுநோய் பிச்சைக்காரர் இல்லத்தை சேர்ந்த கவிஞர் முகமது அலி, புத்தகத்தை வெளியிடுகிறார்.

முதல் பிரதியைஉடல் ஊனமுற்ற ஒருவர் வாங்கிக்கொள்கிறார்.

தமிழக அரசு திட்டங்கள் மூலம் கண் ஒளி பெற்ற ஒருவரும், இலவச சைக்கிள் ரிகஷா பெற்ற இன்னொருவரும் பாராட்டிப் பேசுவார்கள். மற்றும் தமிழ் அறிஞர்கள் பலர் கலந்து கொள்கிறார்கள்.

விழாவுக்கான ஏற்பாடுகளை 'தினமணி கதிர்" சாவியும், ராமகிருஷ்ணனும் செய்து வருகிறார்கள்.

# புது காங்கிரஸ் கூட்டத்தில் அடிதடி: போலீஸ் துப்பாக்கி சூடு

**கிருஷ்ணாகர், ஏப், 20—புதுகாங்கிரஸ் கூட்டத்தில் அக்கட்சியைச் சேர்ந்த இரு கோஷ்டிகளிடையே மோதல் ஏற்பட்டதைத் தொடர்ந்து போலீசார் 8 தடவை துப்பாக்கிச் சூடு நடத்தினர்.**

இச் சம்பவம் கிருஷ்ணாகர் நகரில் நடந்தது.

மாநில முன்னாள் உணவு அமைச்சர் காசிகாந்த மொய்த்திரா இப் பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

பொதுக் கூட்டம் நேற்று மாலை சுமார் 4 மணிக்குத் துவங்கிய .. பொதுக் கூட்டம் துவங்கிய உடனேயே இருதரப்பினரும் ஒருவரை ஒருவர் தாக்கி கோஷம் எழுப்ப ஆரம்பித்தனர். இதைத் தொடர்ந்து பலத்த கல் வீச்சு நடந்தது.

நிலைமையை சமாளிக்க போலீசார் 8 தடவை துப்பாக்கி சூடு நடத்தினர்.

எனினும் துப்பாக்கி சூட்டில் யாரும் காயமடையவில்லை.

இச்சம்பவம் பற்றிய விவரங்களை நாதியா மாவட்ட புது காங்கிரஸ் பொதுச்செயலாளர் அமரேஷ் சந்திர பிஸ்வாஸ் தெரிவித்தார்.

இச்சம்பவத்தைத் தொடர்ந்து பிஸ்வாஸ், இக் கோஷ்டிப் பூசலைத் தீர்க்க மாநில முதல்வர் தலையிட வேண்டுமென்று கோரினார்.

# மகாராஷ்டிரா நகரில் துப்பாக்கிச்சூடு: 106 பேர் காயம்

ரத்னகிரி, ஏப். 20—"மகாராஷ்டிராவில் ரத்னகிரிநகரில் வியாழக்கிழமை மாலை பந்த் நடந்தபோது வன்முறை ஆர்ப்பாட்டக்காரர் களுக்கும் போலீசாருக்குமிடையே மோதல் ஏற்பட்டது. இந்த மோதலில் 86 போலீசார் உட்பட 106பேர்காயமடைந்தனர். மாவட்ட மாஜிஸ்திரேட்டும் காயமடைந்தார்.

வன்முறை செயல்களின் போது போலீசார் சுட்டதில் 4 பேர் காயமடைந்தனர். ஆர்ப்பாட்டக்காரர்களைக் கலைக்க முன்னதாக போலீசார் தடியடி, கண்ணீர்ப் புகைப் பிரயோகம் நடத்தினர். போலீஸ் சூடு சம்பவம் குறித்து மாஜிஸ்டிரேட்டை கொண்டு விசாரணை நடத்த உத்திரவிடப்பட்டுள்ளது.

உணவு ரேஷன் அதிகரிக்கப்பட வேண்டுமெனக் கோரி 10 ஆயிரம் பேர் கலெக்டர் அலுவலகத்தை நோக்கி ஊர்வலமாகச் சென்றனர். ஜனசங்கர்ஷ சமிதி இதற்கு ஏற்பாடு செய்தது. அப்போது நடத்தப்பட்ட கல் வீச்சில் காயமடைந்த போலீசாரில் போலீஸ் சூப்ரெண்டெண்ட் இரு பெண் கான்ஸ்டபிள்கள் ஆகியோரும் உள்ளனர். கல்வீச்சின் விளைவாக ஊர்வலத்தில் சென்ற 16 பேர் காயமுற்றனர்.

இச் சம்பவங்களை யொட்டி 17 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். இப்போது அமைதி நிலவுகிறது.

## ரஷிய நிபுணர்கள் பாராட்டு

மாஸ்கோ, ஏப். 20—இந்தியா வெற்றிகரமாக தனது முதலாவது செயற்கைக்கோளை பறக்கவிட்டுள்ளதை பிரபல ரஷிய விஞ்ஞானிகள் பாராட்டியுள்ளனர்.

ரஷியாவின் பிரபல விஞ்ஞானியான போரிஸ் பெட்ராவ் கூறுகையில் இந்திய விஞ்ஞானிகளின் மிக உயர்ந்த திறமையையும் அவர்களுடைய ஆற்றலையும் பாராட்டியுள்ளார்.

வானில்செயற்கைகோளைப் பறக்க விடுவதில் உலகில் இந்தியா 9-வது நாடு என்ற இடத்தைப் பிடித்துள்ளது என்றும் அவர் சொன்னர்.

செயற்கைக் கோளின்மூலம் இந்தியா நடத்த இருக்கும் வான ஆராய்ச்சி மிக முன்னேறியதாகும் என்றும் அவர் கூறினர்.

### இந்தியா செலுத்திய செயற்கை கோள்

# சென்னைக்கு மேலாக பறக்கிறது

புதுடெல்லி. ஏப். 20—இந்தியாவின் முதலாவது செயற்கை கோள் வானில் செலுத்தப்பட்டு பூமியிலிருந்து சுமார் 375 மைல் உயரத்தில் 96 நிமிஷத்துக்கு ஒரு முறை வீதம் வெற்றிகரமாக பூமியைச் சுற்றிவருகிறது.

சுமார் 360 கிலோ எடைகொண்ட அந்த செயற்கை கோள் பூமியைச் சுற்றிச் சுற்றி வரும்போது சென்னை பிராந்தியத்துக்கு மேலாகப் பறந்து செல்கிறது. இந்திய செயற்கைகோள் சென்னை அருகே ஸ்ரீ ஹரி கோட்டா என்னுமிடத்திலுள்ள ராக்கெட் தளத்துக்கு தொடர்ந்து தகவல்களை அனுப்பிக்கொண்டிருக்கிறது,

1400 ஆண்களுக்கு முன்னர் வாழ்ந்த பிரபல இந்திய கணித மேதையும், வான் ஆராய்ச்சி நிபுணருமான ஆரியப்பட்டரை கவுரவிக்கும் வகையில் இந்திய செயற்கை கோளுக்கு "ஆரிய பட்டா" என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இந்திய செயற்கைகோள் பெங்களூர் அருகே பீன்யா என்னுமிடத்தில் தயாரிக்கப்பட்டதாகும். அதில் மிக நுணுக்கமான ஆராய்ச்சிக் கருவிகள் உள்ளன. அச்செயற்கைக்கோள் கிட்டத்தட்ட பந்து வடிவம் கொண்டது.

இச் செயற்கை கோள் இந்திய நிபுணர்கள் உருவாக்கியதாகும்.

### மாபெரும் சாதனை

இந்தியா செயற்கை கோளை வானில் செலுத்தியுள்ளதானது மாபெரும் சாதனையாகும். சுமார் 11 மாதங்களுக்கு முன்னர் ராஜஸ்தானில் பூமிக்கு அடியில் தனது முதலாவது அணுகுண்டை வெடித்து பெரும் சாதனை நிகழ்த்தியது. அதை அடுத்து கடலுக்கு அடியில் இருந்து எண்ணெய் எடுப்பதில் வெற்றி கண்டது. இச் சாதனைகளைத் தொடர்ந்து இப்போது செயற்கை கோளை வானில் செலுத்தி வான வெளித்துறையில் புதிய சாதனையை நிகழ்த்தியுள்ளது.

இதுவரை ரஷியா, பிரிட்டன், சீன முதலான 8 நாடுகள்தான் வானவெளியில் செயற்கை கோளை செலுத்தி சாதனை நிகழ்த்தியுள்ளன. இப்போது 9-வது நாடாக இந்நாடுகளின் வரிசையில் இந்தியாவும் இடம் பெற்றுள்ளது.

### ரஷ்யாவுக்கு அனுப்பியது ஏன்?

இந்திய செயற்கை கோள் பெங்களூரில் தயாரிக்கப்பட்டது என்றாலும் அது ரஷியாவுக்கு அனுப்பப்பட்டு ரஷியா ராக்கெட்டுகள் மூலம் வானில் செலுத்தப்பட்டது.

செயற்கை கோள் ஒன்றை வானில் செலுத்துவதற்கு 3 அடுக்கு ராக்கெட்டு தேவை. அவ்வித ராக்கெட் இப்போது இந்தியாவிடம் இல்லை. எனவேதான் இந்திய செயற்கை கோள் ரஷியாவுக்கு அனுப்பப்பட்டு அங்குள்ள ரஷிய வானவெளி தளத்திலிருந்து நேற்று இந்திய நேரப்படி பிற்பகல் 1 மணிக்கு வானில் செலுத்தப்பட்டது.

எனினும் செயற்கைகோளை செலுத்துவதற்கான ராக்கெட்டுகளைத் தயாரிப்பதில் இந்தியா மும்முரமாக ஈடுபட்டுள்ளது. இந்தியா இவ்வித 3 அடுக்கு ராக்கெட்டுகளை அடுத்த சில ஆண்டுகளில் தயாரித்துவிடும் இம்முயற்சி வெற்றிபெற்றால் எதிர்காலத்தில் இந்திய செயற்கைகோள்கள் சென்னை அருகே உள்ள ஸ்ரீ ஹரி கோட்டா ராகெட் தளத்திலிருந்து வானில் செலுத்தப்படும்.

இப்போது வானில் செலுத்தப்பட்டுள்ள இந்தியாவின் முதலாவது செயற்கை கோள். வானில் பறந்து கொண்டிருக்கும் போது சூரியனிலிருந்து வெளிப்படும் "நியூட்ரான்கள்" "காமா" கதிர்கள் ஆகியவற்றை ஆராயும் "எக்ஸ்-ரே" நட்சத்திரங்களை ஆராயும். பூமியின் காற்று மண்டலத்தில் உள்ள எலக்ட்ரான்களையும், மற்றும் பல கதிர்களையும் ஆராயும்.

இதுபற்றிய தகவல்களை அது ஸ்ரீஹரிகோட்டாவிலுள்ள ராக்கெட் தளத்துக்கும் மாஸ்கோ அருகே உள்ள ராக்கெட் தளத்துக்கும் அனுப்பிவரும்.

இந்த தகவல்களைப் பெற்றுப் பகுத்து ஆராய்வதற்கான வசதிகள் ஸ்ரீ ஹரிகோட்டா ராக்கெட் தளத்தில் உள்ளன.

இத்தகவல்களை சேகரித்து அனுப்ப இந்திய செயற்கை கோளில் நவீனக் கருவிகள் உள்ளன.

"இச்செயற்கை கோள் பூமியை சுற்றிவரும் போது ஸ்ரீ ஹரிகோட்டா—சென்னை பிராந்தியத்துக்கு மேலாகவும் பறந்து செல்லும்.

இந்திய செயற்கை கோள் சுமார் 6 மாத காலம் பூமியைச் சுற்றியபடி தகவல்களை அனுப்பிவரும். எனினும் இது சுமார் 2 ஆண்டுக் காலம் பூமியைச் சுற்று வரக்கூடும்.

இந்திய செயற்கைக் கோளைத் தயாரிக்க சுமார் ரூ. 5 கோடி செலவானதாக மதிப்பிடப்படுகிறது.

## இந்திரா மகிழ்ச்சி

புதுடெல்லி, ஏப் 20—இந்தியாவின் முதலாவது செயற்கைக் கோள் வெற்றிகரமாக பறக்கவிடப்பட்டுள்ளது குறித்து பிரதமர் இந்திரா மகிழ்ச்சி தெரிவித்தார்.

ரஷியாவிலிருந்து ரஷிய ராக்கெட்டு மூலம் இந்திய செயற்கைகோள் வானில் பறக்கவிடப்பட்டு அது வெற்றிகரமாக பூமியைச் சுற்ற ஆரம்பித்ததும் அது பற்றிய செய்தி அப்போது பாண்டிச்சேரியில் இருந்த பிரதமர் இந்திராவுக்கு உடனே தெரிவிக்கப்பட்டது.

"விஞ்ஞான தொழில் நுட்பத் துறையில் சுயபலம் பெறுவதில் இது மற்றொரு முன்னேற்றமாகும்" என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினர்.

இந்திய செயற்கை கோளை பறக்க விட்டதற்குப் பொறுப்பான இந்திய விஞ்ஞானிகளுக்கு இந்திரா காந்தி பாராட்டு தெரிவித்தார்.

இதற்கு உதவி செய்த ரஷிவுக்கு பிரதமர் இந்திரா நன்றி தெரிவித்தார்.

### ஜனதிபதி பாராட்டு

இந்திய செயற்கை கோள் வெற்றிகரமாகப் பறக்கவிடப்பட்டுள்ளதைத் தொடர்ந்து இந்திய விஞ்ஞானிகளுக்கு ஜனதிபதி பகுருதீன் அலி அகமது பாராட்டுத் தெரிவித்துள்ளார்.

## அரசு பஸ் கிடங்கில் திருட்டு: 3 பேர் கைது

மதுரை, ஏப். 20—தமிழக அரசுபோக்குவரத்து இலாகா மோட்டார் உறுப்புகள் கிடங்கிலிருந்து ரூ. 30ஆயிரம் மதிப்புள்ள உறுப்புகள் திருட்டுப் போய் உள்ளன. இது தொடர்பாக 3 இளைஞர்களை போலீசார் கைது செய்துள்ளனர்.

இவர்கள் அளித்த தகவலின் பேரில் திருட்டுப் போன பொருள்கள் யாவும் கைப்பற்றப்பட்டதாக போலீசார் கூறினர்.

ஜன்னல் கம்பிகளை அகற்றி இப்பொருள்கள் திருடப்பட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த கிடங்கின் முன்னாள் ஊழியர் புட்டுத்தோப்பு சுந்தர ராஜ் (வயது 24), பொன்னகரம் பங்கஜாட்சன் (23), அருள் ராஜ்புரம் வையாபுரி (29) ஆகியோர் கைதாகியுள்ளனர்.

### சி. டி. ஆர். ராஜினமா

## "புரட்சி மக்கள் கட்சி:" தமிழ் நாட்டில் மேலும் ஒரு கட்சி உதயம்

சென்னை, ஏப். 20—தமிழ்நாட்டில் மேலும் ஒரு கட்சி உதயமாகிறது. இந்திய மக்கள் கட்சியின் பொருளாளராக உள்ள சி. டி. ராஜகோபால் அக்கட்சியில் இருந்து ராஜிநாமா செய்துவிட்டு, "புரட்சி மக்கள் கட்சி" என்ற பெயரில் புதிய கட்சியைத் துவக்குகிறார்.

இதுபற்றிய விவரம் வருமாறு:—

தமிழக இந்திய மக்கள் கட்சியின் பொருளாளராகவும், சி.டி.ஆர்.அணி மன்றங்களின் ஸ்தாபகராகவும், ஸ்டண்டு சோமு வீரமன்றக் காப்பாளராகவும் சி. டி. ராஜகோபால் இருந்து வந்தார்.

அண்மையில் பிரதமர் இந்திராகாந்தி சென்னை வந்திருந்தபோது அவருக்கு கறுப்புக்கொடி காட்டப்போவதாக இந்திய மக்கள் கட்சியின் சார்பில் அறிவிக்கப்பட்டிருந்ததாக சி. டி. ராஜகோபால் கூறியிருந்தார்.

ஆனால் கடைசி நேரத்தில் அக்கட்சியின் செயலாளர் டாக்டர் சந்தோஷம், துணைச்செயலாளர் சுப்ரமணியம் ஆகியோர் அந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ளப்போவதில்லை என்று அறிவித்து விட்டனர்.

### சி. டி. ஆர். கைது

ஆனால் சி. டி. ராஜகோபால் உள்பட சுமார் 200-க்கும் மேற்பட்ட மக்கள் கட்சித் தொண்டர்கள், சி. டி. ஆர், அணி இளைஞர்கள், ஸ்டண்டுசோமு மன்ற உறுப்பினர்கள் ஆகியோர் கருப்புக்கொடி ஆர்ப்பாட்டத்தில்கலந்து கொண்டு கைதாயினர்.

அதன் பின்பு இந்திராவுக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்க மக்கள் கட்சி தயங்குவதாக சி. டி. ராஜகோபால் கட்சித் தலைமைமீது அதிருப்தி கொண்டிருந்தார். எனவே அவர் இன்று புதிய கட்சி ஆரம்பிக்கும் முடிவுக்கு வந்தார்.

### ராஜினமா

இது குறித்து இன்று விடுத்துள்ளஒரு அறிக்கையில்சி. டி. ராஜகோபால் கூறியதாவது:

மக்கள் கட்சியின் அடிப்படைக் கொள்கையைக் காற்றிலே பறக்க விட்டுவிட்டு. அதன் தலைவர்கள் கட்சிப் பணியில் செயல்படமுடியாத நிலையில் இருப்பது கண்டு மிகவும் வேதனை அடைந்தேன்.

களத்திலே இறக்கப் பயந்தவர்கள் கைதாகியிருக்கின்ற தொண்டனைக் கிண்டல் செல்கின்றபொறுப்பற்றபோக்கிலே போவதைப் புரிந்துகொண்டேன். எனவே அந்தக் கட்சியில் இன்னும் நீடித்திருப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்து அக்கட்சியிலிருந்து ராஜினமாச் செய்துவிட்டேன்.

### புதிய கட்சி உதயம்

இன்னும் சில நாட்களில் சுமார் 1500 தொண்டர்களுடன் புரட்சி மக்கள்கட்சிஎன்ற பெயரில் புதிய கட்சியைத் துவக்கிஉண்மையான மக்கள் கட்சியின் கொள்கையைச் செயல்படுத்த முடிவு செய்திருக்கிறேன்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் சி. டி. ராஜகோபால் கூறியிருக்கிறார்.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம் — கஸ்தூரி விஜயம்
நியூ எல்பின்ஸ்டன் — விஷ்ணு விஜயம்
நேஷனல் — பாவமன்னிப்பு
ஈராஸ் — அவளும் பெண்தானே

**பல்லாவரம்**

லக்ஷ்மி — கஸ்தூரி விஜயம்

**தாம்பரம்**

நேஷனல் — பக்த துகாராம்
எம். ஆர். கியேட்டர் — சொந்தங்கள் வாழ்க
ஸ்ரீ சித்ரா — ஜத்தார் (ஹிந்தி)

**வில்லிவாக்கம்**

ராயல் — பட்டாம்பூச்சி

**தூரோம்பேட்டை**

வெற்றி — அவன்தான் மனிதன்

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன் — அவள் ஒரு தொடர் கதை

### சபாநாயகர் தீர்ப்பு:

## ஆதித்தனர் சொத்துக் கணக்கு

சென்னை, ஏப். 20—சட்டசபையில் நேற்று தாக்கல் செய்யப்பட்ட அமைச்சர் ஆதித்தனரின் சொத்துக் கணக்குபற்றி எட்மண்ட் (அதிமுக) ஒரு ஒழுங்குப் பிரச்னையை எழுப்பினர்.

இதில் தவறு இருந்தால் உரிமைப் பிரச்னை கொண்டு வரலாம். இதில் ஒழுங்குப் பிரச்னை இல்லை என்று சபாநாயகர் தீர்ப்பு அளித்தார்.

## ரப்பர்தூள் ரோடு: மந்திரி தகவல்

சென்னை, ஏப். 20—தாரோடு ரப்பர்தூள் கலந்து ரோடு போடும திட்டம் அரசின் பரிசீலனையில் இருக்கிறது. இதைப் பரீட்சை செய்து பார்த்த போது ஊக்கம அளிப்பதாக இருக்கிறது இது அதிக நாட்கள், அதிக ஆண்டுக்கு இருக்கும். இந்த ஆண்டு இதை பரிசோதனை செய்து பார்க்க இருக்கிறோம என்று அமைச்சர் ப. உ. சண்முகம சட்டசபையில் கேள்விகளுக்கு பதில் அளிக்குமபோது தெரிவித்தார்.

## தி. மு. கழக எம். எல். ஏ. மகன் மரணம்

குடந்தை, ஏப். 20—தஞ்சை மாவட்டம் ஆடுதுறை தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கு. ராசமாணிக்கம் (திமுக). அவருடைய மகன் சேகர் வயது 24.

சேகர் கும்பகோணத்தை அடுத்த நரசிங்கப் பேட்டையில் மோட்டார் சைக்கிளில் போய்க்கொண்டிருந்தபோது மோட்டார் சைக்கிள் மரத்தின் மீது மோதியது.

இதனல் படுகாயம் அடைந்த அவர் தஞ்சை ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு, அங்கு சிகிச்சை பலன் அளிக்காததால், பரிதாபமாகச் செத்தார்.

### சென்னை பாங்கி கொள்ளை:

## இன்னும் துப்புக் கிடைக்கவில்லை

சென்னை, ஏப். 20—திருவான்மியூர் ஸ்டேட் பாங்கியில் பட்டப்பகலில் துப்பாக்கி முனையில் ரூ. 36 ஆயிரத்தை, 4 முகமூடி மனிதர்கள் கொள்ளை அடித்துச் சென்றார்கள் அல்லவா? இதுபற்றி இன்னும் எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. போலீசார் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## ஆளும் கட்சியின் பிரித்தாளும் சூழ்ச்சி: காமராஜ் கண்டனம்

திருவண்ணமலை, ஏப். 20—ஜாதி—மதத்தின் பேரால் மக்களைப் பிரித்தாளும் சூழ்ச்சியில் ஆளும் கட்சிகள் ஈடுபடுகின்றன என்று காமராஜ் குற்றம் சாட்டினர்.

வடஆற்காடு மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து வரும் காமராஜுக்கு செங்கத்தில் வரவேற்பு அளிக்கப்பட்டது.

அப்போது அவர் கூறியதாவது:

இப்போதுள்ள அரசியல் கட்சிகள் தங்களது குறிக்கோளை அடைய எப்படியும் செயல்படத் துணிகிறார்கள். தங்களுக்கு என்று ஒரு நிலையான கொள்கையை கடைபிடிப்பதில்லை.

உதாரணத்துக்கு எம்ஜிஆர் சட்டசபைக்கு செல்வதில்லை என்று கூறி, அதற்கான காரணத்தையும் தெரிவித்திருக்கிறார் ஆனல் அதே காரணங்களை தம் கட்சியைச் சேர்ந்த மற்ற எம். எல். ஏ. களுக்கு அவர் சொல்லவில்லை அவர்கள் சட்டசபைக்குச் சென்றுகொண்டிருக்கிறார்கள்.

மக்கள் தங்களது குறைகளை அரசாங்கத்துக்கு தெரிவிக்க வேண்டும் என்பதற்காக ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆனல் அந்தப் பிரதிநிதி சட்டசபைக்கே செல்வது இல்லை என்று முடிவு செய்தால் எப்படி தமது கடமையை செய்ய முடியும்?

### பிரித்தாளும் சூழ்ச்சி

இந்தியாவை ஆக்கிரமித்தவர்கள் அனைவரும் மக்களைப் பிரித்து வைத்தே தங்களது குறிக்கோளை அடைந்தனர்.

துரதிஷ்டவசமாக சுதந்திரம் கிடைத்த பிறகும் ஆளும் கட்சியினர் ஜாதியின் பெயராலும் மதத்தின் பெயராலும் அதே தத்துவத்தைத் தான் கையாளுகிறார்கள்.

வாக்குரிமையின் மதிப்பை மக்கள் சரியாக உணரவில்லை.

ஒரு கிறுக்கன்கூட தேர்தலில் நின்று வெற்றிபெற்றுவிடலாம் என்று நினைக்கும் அளவுக்கு மக்கள் வந்துவிட்டார்கள்.

கடந்த சில ஆண்டுகளாக பல பள்ளிகளும் கல்லூரிகளும் திறக்கப்பட்டிருந்தாலும்கூட, வேலைவாய்ப்புகளை உருவாக்க எந்தவித முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை என்று காமராஜ் பேசினர்.

### சுற்றுலா பஸ் விபத்து :

## பத்திரிகை ஊழியர் 2 பேர் மரணம்

சென்னை, ஏப் 20—சுற்றுலா பஸ் ஒன்று விபத்துக்குள்ளானதில் பத்திரிகை ஊழியர்கள் 2 பேர் மரணம் அடைந்தனர். மற்றும் 20பேர் படுகாயம் அடைந்தனர்.

இது பற்றிக் கூறப்படுவதாவது:—

சென்னை வடபழனியில் உள்ள ஒரு பத்திரிகையைச் சேர்ந்த ஊழியர்கள் ஒரு சுற்றுலா பஸ்ஸில்மைசூர் பெங்களூர் ஊட்டி ஆகிய இடங்களுக்குச் சென்றனர்.

அந்த பஸ் ஊட்டி—மைசூர் இடையே உள்ள மலைப்பாதையில் விபத்துக்குள்ளாகியது. இதில் ஈசுவரன் (வயது 40) அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார், முனுசாமி (வயது 55) பலத்த காயங்களுடன் மைசூர் அரசினர் ஆஸபத்திரியில் சேர்க்கப்பட்டு, அங்கு மரணம் அடைந்தார். ஈஸவரனின் மனைவிக்கு கை எலும்பு முறிந்துவிட்டது. மற்றும் 20 பேர் படுகாயம் அடைந்து ஆஸபத்திரியில் சேர்க்கபட்டுள்ளனர்.

இறந்தவர்கள் இருவரும் அச்சுக் கோர்ப்பவர்கள் (கம்பாசிடர்) என்று கூறப்படுகிறது.

## வீடு புகுந்து கொள்ளை: 4 பேர் கைது

சென்னை, ஏப். 20—சென்னை நகரில் பல இடங்களில் ஆள் இல்லாத நேரத்தில் வீடு புகுந்து கொள்ளை அடித்ததாக 4 பேர் கைது செய்துள்ளனர்.

திருட்டுப்போன பொருள்களின் மதிப்பு ரூ. 15 ஆயிரம் இருக்குமென்று கூறப்படுகிறது.

## விருந்துக்கு அழைத்து 4 பேரை சுட்டு கொன்றார்

சிகாகோ, ஏப். 20—அமெரிக்காவில் வேலை பார்க்கும் இந்திய என்ஜினியர் ஒருவர் தமது நண்பர்கள் பலரை குடும்பத்தோடு தமது வீட்டிற்கு விருந்திற்கு அழைத்தார்.

அவர்களைத் துப்பாக்கியால் சுட்டார். இதில் 4 பேர் மாண்டனர். மற்றும் 4பேர் காயமடைந்தனர்.

என்ஜினீயர் பிரிஜ்கிஷோர் (வயது 36) தமது படுக்கை அறைக்குச் சென்று தன்னைத் தானே துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு மாண்டார்.

இந்தச் சம்பவம் வெள்ளியன்று நடந்தது.

மாண்டுபோன மற்றவர்கள் பெயர் வருமாறு; வலத்தூர் (2 வயது), அனிதா மேத்தா (8 வயது), கலம்கந்த் பேடா (28 வயது), சம்பா மேத்தா (34 வயது).

காயமடைந்த 4 பேரும் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு குணமடைந்து வருகின்றனர்.

### மதுரைமாநகராட்சி

## 3 மாதத்தில் தேர்தல்: தங்கமணி கோரிக்கை

சென்னை, ஏப் 20—மதுரை மாநகராட்சியை விசேஷ அதிகாரியின் பதவி காலத்தை 1 ஆண்டு காலத்துக்கு நீடிக்க வகை செய்யும் மசோதா மீது நேற்று சபையில் விவாதம் நடந்தது. கே. டி. தங்கமணி மதுரை மாநகராட்சி முறையாக நடந்தது. ஆனல் அதுவும கலைக்கப்பட்டிருக்கிறது. மே மாதம் தேர்தல நடக்கும என்று அரசின் சார்பில் அறிவிக்கப்பட்டது. வார்டுகளை பிரிக்கும வேலையால் தாமதமாகிறது என்பது சரியல்ல. ஒரு ஆண்டு என்று நீடிக்காமல் 3 மாதங்களிலேயே தேர்தல நடத்தவேண்டும. கானிமுத்து (அதிமுக) மூன்று மாதத்திற்குள் நிச்சயம தேர்தலை நடத்தவேண்டும. மேலும தள்ளிவைத்தால் மக்களின் வெறுப்புக்கு ஆளாகநேரிடும,

### பக்கிங்காம் கால்வாய்க்கு

## ரூ. 65 லட்சம் செலவில் புதிய திட்டம்: ப. உ. ச. தகவல்

சென்னை, ஏப். 20 திருவொற்றியூர் நகரின் அருகே பக்கிங்காம் கால்வாயை ஆழப்படுத்தி கரையை உயர்த்த 65 லட்ச ரூபாய்க்கு திட்டமிட்டு இருப்பதாக அமைச்சர் ப. உ. சண்முகம் ஒரு கேள்விக்கு பதில் அளித்தபோது தெரிவித்தார்.

அரங்கண்ணல் : அந்தக் கால்வாயை சீரமைக்கும் போது அதன் கரைகளில் 3 ஆயிரம் குடிசைகள் இருக்கின்றன. இவர்களுக்கு வடுகள் கட்டித்தர இந்த நிலாகா நிதி தருமா?

ப. உ. சண்முகம் ;— இது இந்தக் கால்வாயை சீரமைக்கும் திட்டம். குடிசைகளை மாற்று அமைக்க திட்டம் இல்லை. இது குறித்து குடிசை மாற்று வாரியத் தலைவரிடம் கேட்கவேண்டும்.

## கேள்வித்தாள் பஞ்சம்: பரீட்சை அறையில் மாணவர்கள் சண்டை

சென்னை, ஏப் 20—பல்கலைக் கழகப் பரீட்சையில் கேள்வித்தாள் பற்றாக் குறை காரணமாக மாணவர்களிடையே சண்டை ஏற்பட்டது.

டெல்லி பல்கலைக் கழகம் நடத்தும் தபால் மூலம் கல்வி பரீட்சை சென்னையில் நடைபெற்றது.

பி.காம். வகுப்பு மாண்வர்கள் 550 பேர் பரீட்சை எழுத பதிவு செய்திருந்தனர். ஆனல் டெல்லி பல்கலைக் கழகம் 400 கேள்வித்தாள்களைத்தான் அனுப்பியிருந்ததாம்.

550 மாண்வர்கள் பரீட்சைக்கு மனுச்செய்திருந்தாலும், பல மாணவர்கள் பரீட்சைக்கு ஆஜராகவில்லை.

சுமார் 4 மாணவர்கள் தான் ஆஜரானதாகக் கூறப்படுகிறது.

ஆகையால் 400 மாணவர்களுக்கு மேல் உள்ளவர்களிடம் மற்றவர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து எழுதுமாறு கூறினர்களாம்.

பி. காம். பரீட்சை கேள்வித்தாளை தொடர்ந்து பார்த்துக் கொண்டே எழுத வேண்டிய பரீட்சை ஒரு கேள்வித்தாளை இரண்டு பேர் பார்த்து எழுதுவதால் மாணவர்களிடையே எனக்கு உனக்கு என்று மோதலும், சண்டையும் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. இதனல் விடை எழுதுவது தடைப்பட்டது என்று மாணவர்கள் புகார் கூறினர்கள்.

கேள்வித்தாள் பஞ்சத்தை எடுத்துக்காட்டி டெல்லி பல்கலைக் கழகநிர்வாகத்தினருக்கு மாணவர்கள் சங்கம் கடிதம் எழுதியுள்ளது. விடைகளைத் திருத்தும்போது மார்க்குகளை தாராளமாகப் போடுமாறு கோரியுள்ளது.



"இங்கேயும் மனிதர்கள்" படத்தில் மு. க. முத்து.

# தேன் சிந்துதே வானம்

(விமர்சனம்)

கல்யாணமே வேண்டாம் என்கின்ற பத்தியை சம்மதிக்க வைக்க தாத்தா ஒரு விளம்பரம் செய்கிறார். அதைப் படித்துவிட்டு வந்த இளைஞனிடம் பேத்தியை சரிக்கட்டும்படி தாத்தா கெஞ்சுகிறார். அவனோ முருங்கை மரத்தில் ஏறிக் கொள்கிறான். பேத்தியை அவனோடு சேர்த்து வைக்க தாத்தா விடாமல் துரத்துகிறார்.

இந்தக் கதையை சமீபத்தில் படமாகப் பார்த்ததாக நினைவுக்கு வருகிறதா? உஷ்—வெளியில் சொல்லி விடாதீர்கள். தமிழ்ப் பட உலகம் கிடு கிடுவென்று இமயமலை சிகரத்தில் ஏறி நிற்பதற்கு இதுதான் காரணம் என்பதை மட்டும் தெரிந்து கொள்ளுங்கள்.

தயாரிப்பாளரைக் கட்டாயம் பாராட்ட வேண்டும்— இது லேடீஸ் ஹாஸ்டல் மலையாளப் படத்தின் கதை. ஆசிரியர் டாக்டர் பாலகிருஷ்ணன் என்று மறைக்காமல் தெரிவித்ததற்காக.

மற்றபடி—யாருக்கு . . . யாரோ? எப்படியோ போகட்டும் விடுங்கள்.

## வசனம்

தீர்க்க சுமங்கலி, சொந்தப் திக்கற்ற பார்வதி போன்ற படங்களுக்கு அச்சாணி நாடகத்திற்கு கதைவசனம் எழுதிய காரைக்குடி நாராயணன் வசனத்தை மட்டும் எழுதியிருக்கிறார் அவரைப் பாராட்டுகின்ற கட்டங்கள் பல இருந்தாலும், இரு பொருள்படும் நகைச்சுவை வசனங்கள் நல்ல பெயரைப் பாழாக்கும்படி இருப்பதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. அவராக எழுதினாலும், யாரும் வற்புறுத்தி எழுதினாலும் பழி அவர் தலையில் தான.

## நடிப்பு

சிவகுமார் பேச்சு, துடிப்பான நடிப்பு, எடுப்பான உடம்பு இவைகள் நம்மைக் கவர்கின்றன. கமலஹாசன் குறும்புப் பேச்சு, பார்வை, நடிப்பு ரசிக்கத் தக்கது.

தங்கவேலு, மேஜர் சுந்தர்ராஜன், ஜெயச்சித்ரா, ராணி சந்திரா, சோ, மனோரமா, நீலு எல்லோரும் குறையின்றி நடித்திருக்கின்றனர்

'உன்னிடம் மயங்குகிறேன்' ஜேசுதாஸ் பாடல் நம்மை மயக்குகின்றது. பொதுவாக குமாரின் இசையமைப்பில் பாடல்கள் யாவும் இனிமையாக ஒலிக்கின்றன.

நினைத்தநேரத்தில் மாணவிகளுக்கு உடற்பயிற்சி கற்றுக் கொடுப்பதற்கும் பாட்டுப் பாடுவதற்கும் இளைஞர்களுக்கு சர்வசுதந்திரம் தந்துள்ள மாணவிகள் விடுதி எங்கே இருக்கிறது?

நகைச்சுவைக் காட்சிகளுடன் படம் விறுவிறுப்பாகச் செல்லும்போது நாராசம் போன்ற விரசமான வசனங்கள் கேட்கவே கூசும்படி திணிக்கப்பட்டிருக்க வேண்டாம் ரா. சங்கர் டைரக்ட் செய்திருக்கிறார்.

மொத்தத்தில்—தேன் சிந்துகிற வானத்தில் இடியும் மின்னலும் கூட உண்டு.

—நாகை தருமன்



'காரோட்டிக் கண்ணன்' படத்தில் பத்மப்பிரியா.



இவர்கள் இருவரையும் கூர்ந்து கவனியுங்கள். அம்மாமி வேடத்தில் ஒளிந்திருப்பவர் சிவகுமார். அருகில் இருப்பவர் கமலஹாசன். படம்: தங்கத்திலே வைரம்.

# முத்துராமனுக்கு காயம்: படப்பிடிப்பில் நடந்தது

'ஊட்டி'யில் நடைபெற்ற "சித்ரா பௌர்ணமி" வெளிப்புறப் படப்பிடிப்பில் கலந்து கொள்ள சிவாஜி கணேசனும் முத்துராமனும் சென்றிருந்தனர்.

பி. மாதவன் டைரக்ட் செய்யும் படம் இது.

குதிரையில் முத்துராமன் செல்வது போல் காட்சி படமாக்கப்பட இருந்தது.

முத்துராமன் குதிரையில் ஏறிச்சென்றார். சிறிது தூரம் சென்றவுடன் அவருக்குத் துணையாக ஒருவரை சிவாஜி கணேசன் அனுப்பிவைத்தார். முத்துராமன் குதிரையைத் திருப்பும்போது பின்னால் வந்தவர் திடீரென்று குறுக்கே வந்துவிட்டார். அந்த குதிரை முத்துராமனின் காலில் பலமாக உதைத்துவிட்டது.

முத்துராமன் காலில் காயம் ஏற்பட்டு வீங்கிவிட்டது. உடனடியாக டாக்டரிடம் அழைத்துச் செல்லப்பட்டு அவருக்கு சிகிச்சை அளித்தனர்.

காலில் பெரிய பிளாஸ்திரியுடன் சென்னை திரும்பியுள்ள முத்துராமன் இந்தத் தகவலைத் தெரிவித்தார்.

# 'மயங்குகிறாள் ஒரு மாது' மே மாதம் வருகிறது

விஜய பாஸ்கர் பிலிம்சாரின் "மயங்குகிறாள் ஒரு மாது" படம் மே மாதம் வெளிவருகிறது.

முத்துராமன், சுஜாதா அசோகன், ஜெயலட்சுமி, தேங்காய் சீனிவாசன், எம். என் ராஜம், விஜயகுமார், காந்திமதி ஆகியோர் நடிக்கின்றனர்

கதை வசனத்தை பஞ்சு அருணாசலமும் பாடல்களை கண்ணதாசன், பஞ்சு அருணாசலமும் எழுதுகின்றனர். விஜயபாஸ்கர் இசையமைக்கிறார்.

எஸ். பி. முத்துராமன் டைரக்ட் செய்கிறார். எஸ். பாஸ்கர் தயாரிக்கிறார்.

சாமுண்டி சித்ரா பிலிம்ஸ் படத்தில் முத்துராமன் ஜெயசித்ரா.



# நடராஜ் சகுந்தலாவுக்கு முதலமைச்சர் பாராட்டு

நடராஜ், சகுந்தலாவின் நாட்டிய நாடக அரங்கேற்றம் மயிலை, ஆர் ஆர். சபாவில் நடைபெற்றது.

வள்ளுவருக்கும், வாசுகிக்கும் திருமணம் நடக்கும் நாடகக் காட்சிக்குப் பிறகு அரங்கேற்ற விழாவிற்கு தலைமை வகித்து முதலமைச்சர் கருணாநிதி பேசினார்.

அவர் கூறியதாவது:

"வள்ளுவருக்கும் வாசுகிக்கும் நடக்கும் மணவிழாவில் அவர்களை வாழ்த்த வாய்ப்புக் கிடைத்ததற்காக மகிழ்கிறேன் முப்பாலை எழுதிய வள்ளுவர் மூன்றாவது பாலை அனுபவிக்கத் துவங்கிய பிறகு குறுக்கே நிற்க நான் விரும்பவில்லை.

இதிலே வருகின்ற பல காட்சிகள் ஆராய்ச்சிக்கு உரியவை. ஆராய்ச்சியில் ஈடுபட்டால் நிகழ்ச்சியை ரசிக்க முடியாது வள்ளுவர் பெயரும், குறளும இன்னும் பதியாத இடங்களிலெல்லாம் இந்தநாட்டிய நாடகம்நடக்க வேண்டும். நடராஜ், சகுந்தலாவின் முயற்சியைப் பாராட்டுகிறேன்."

இவ்வாறு முதல்வர் கருணாநிதி கூறினார்.

உயர்நீதி மன்ற நீதிபதி பு. ரா. கோகுல கிருஷ்ணன் வழுவூர் பி. ராமையாபிள்ளை கலைஞர் எஸ். டி. சுந்தரம் ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

# முத்துராமன் நடிக்கும் புதிய படம்

சுலோசனா பிக்சர்சாரின் இரண்டாவது படத்தில் முத்துராமன் கதாநாயகனாக நடிக்கிறார்.

சுமித்ரா, நந்திதாபோஸ், மனோகர் ஸ்ரீகாந்த், தேங்காய் சீனிவாசன், மனோரமா, பண்டரிபாய், சி. கே. சரஸ்வதி ஆகியோர் நடிக்கிறார்கள்.

வாலியின் பாடல்களுக்கு சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர்

ராஜா சீனிவாசன் வசனம் எழுதுகிறார்.

கதை, திரைக்கதை, டைரக்ஷன் பொறுப்புகளை துரை ஏற்றிருக்கிறார்.

ரமணா சர்ஜிகல் கிளினிக்கில் முத்துராமன் டாக்டராகவும் மற்றும் சுமித்ரா, நந்திதா பேசும் நடித்த காட்சிகள் படமாக்கப்பட்டன.



'நினைத்ததை முடிப்பவன்' படத்தில் எம். ஜி. ஆர்., சாரதா.

# ஸ்ரீவித்யா பிறந்த நாள் விழாவில் முத்து பாட்டு

மு. க. முத்து கல்லூரிக் காளை. அவன் படிப்பில் மட்டுமின்றி விளையாட்டிலும் திறமை மிக்கவன். அவன் தான படிக்கும் கல்லூரி பிரின்சிபால் மகள் ஸ்ரீவித்யாவைக் காதலிக்கிறான்.

காதலனை தனது பிறந்தநாள் விழாவுக்கு வித்யா அழைக்கிறாள். அவன் அருமையாகப் பாடுவான் என்பதை அனைவரும் அறியவேண்டும் என்பதற்காக பாடும்படி வற்புறுத்துகிறாள்.

காதலி கூறிவிட்ட பிறகு காதலன் மறுப்பானா? அவன் பாடுகிறான்.

"நான் பாடுவேன்
கூட நீ ஆடலாம்
இயற்கையின் ஆடலை
எங்குமே காணலாம்"

இதைக் கேட்ட கல்லூரி மாணவர், மாணவியர் ஆடுகின்றனர்.

இக் காட்சி அறிவுச் சுடர் பிலிம்சாரின் "நம்பிக்கை நட்சத்திரம்' படத்தில் இடம் பெறுகிறது.

மு. க. முத்து, ஸ்ரீவித்யா, நாகேஷ், வி. கே. ராமசாமி, அசோகன், விஜயகுமார், பி. ஆர். வரலட்சுமி, புஷ்பலதா, குமாரி சச்சு ஆகியோர் நடிக்கின்றனர்,

திருமலை மகாலிங்கம் டைரக்ட் செய்கின்றனர். மகேந்திரன் வசனத்தையும், பூவை செங்குட்டுவன் பாடல்களையும் எழுதுகின்றனர். லட்சுமி நாராயணன் இசையமைக்கிறார். ஜகத் ஒளிப்பதிவைக் கவனிக்கிறார்.

# கமலஹாசன் ஜெயசுதா ரகசியத் திருமணம்

கமலஹாசனின் அண்ணன் மேல்நாட்டில் படிக்கச் சென்றிருக்கிறார். அவருக்காக பெரும் பணக்காரர் ஒருவரின் பெண்ணை பெற்றோர் முடிவு செய்து வைத்திருந்தனர். ஆனால் மேல்நாடு சென்றிருந்த அவர் திரும்பி வரும் போது அங்குள்ள ஒரு பெண்ணைத் திருமணம்செய்து கொண்டு திரும்புகிறான்.

எதிர்காலக் கணவன் என்று முடிவு கட்டியிருந்தவன் இன்னொருத்தியோடு வந்து இறங்குவதைக் கண்ட பணக்காரரின் மகள் ஏமாற்றம் அடைகிறாள். பெற்றோர் அதிர்ச்சி அடைகின்றனர்.

இந்த நிலையில் அண்ணனுக்கு முடிவு செய்திருந்த பெண்ணிடம் கமலஹாசன் நெருங்கிப் பழகுகிறார். இருவரும் திடீரென்று பதிவுத் திருமணம் செய்து கொள்கின்றனர்.

மூத்த மகன்தான் வெளிநாட்டிலிருந்து ஒரு பெண்ணை மணந்து கொண்டு வந்தான், இளையவனும் இப்படியா என்று பெற்றோர் மனம் வெதும்புகின்றனர்.

ஆனால், எதைப் பற்றியும் கவலைப்படாமல் மனைவி ஜெயசுதாவை அணைத்தபடி கமலஹாசன் தன் அண்ணன் வீட்டிற்குச் செல்கிறார்.

இக்காட்சி "மேல் நாட்டு மருமகள்" படத்தில் இடம் பெறுகிறது.

அண்ணனாக சிவகுமாரும், தந்தையாக கே. டி. சந்தானமும், தாயாகக் காந்திமதியும் நடிக்கின்றனர்,

குமாரி லாரென்ஸ், கோபாலகிருஷ்ணன், ஜூனியர் பாலையா ஆகியோர் நடிக்கின்றனர்.

குன்னக்குடி வைத்தியநாதன் இசை அமைக்கிறார்.

சி. என். வி. மூவிசார் தயாரிக்கும் இந்தப் படத்திற்கு ஏ. பி. நாகராஜன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

இந்த வண்ணப்படம் மே மாதம் வெளிவருகிறது.

Printed by S. V. G. Sowrirajulu at th M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Honorary Editor: N. Muthukumarasami